# கல்வெட்டு

# KALVETTU

திருவள்ளுவராண்டு 2038 (சர்வஜித்) சித்திரைத் திங்கள்



அண்டமார் கல்திட்டை

கல்வெட்டு - காலாண்டிதழ் : 74 (ஏப்ரல் 2007) விலை ரூ.10.00

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை



தஞ்சை மாவட்டத்தில் தொல்லியல் தடயங்களை 17.11.2007 அன்று மாண்புமிகு பள்ளிக் கல்வித் துறை அமைச்சர் திரு. தங்கம் தென்னரசு அவர்கள் பார்வையிட்டார்.

தரங்கம்பாடிக் கோட்டை அருகே மேற்கொண்ட அகழாய்வில் கண்டெடுக்கப்பட்ட தொல்பொருட்களை மாண்புமிகு பள்ளிக் கல்வித் துறை அமைச்சர் திரு. தங்கம் தென்னரசு அவர்கள் 26.2.2008 அன்று பார்வையிடுகிறார். உடன் சுற்றுலா (ம) பண்பாட்டுத் துறைச் செயலர் முனைவர் வெ.இறையன்பு, இ.ஆ.ப. மற்றும் தொல்லியல் துறை முதன்மை ஆணையர் முனைவர் சீதாராம் குருமூர்த்தி, இ.ஆ.ப, ஆகியோர் உள்ளனர்.



கட்டுரைகளில் சொல்லப்படும் கருத்துகளுக்குக் கட்டுரை ஆசிரியர்களே பொறுப்பாவர்

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் அச்சகத்தில் அச்சிட்டு இத்துறை முதன்மை ஆணையர் முனைவர் சீதாராம் குருமூர்த்தி, இ.ஆ.ப. அவர்கள் சார்பாக திரு.இரா.சிவானந்தம் கல்வெட்டாய்வாளரால் வெளியிடப்பெற்றது.



முனைவர் சீதாராம் குருமூர்த்தி இ.ஆ.ப.,
முதன்மை ஆணையர்
தொல்லியல் துறை

தமிழ் வளர்ச்சி வளாகம்,
ஹால்ஸ் சாலை,
எழும்பூர், சென்னை-600 008.
18-02-2008

# பதிப்புரை

தொல்லியல் துறையின் 74-ஆவது இதழான இக்காலாண்டிதழ் தொல்லியல் சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட தமிழ், ஆங்கிலக் கட்டுரைகள் மற்றும் புதிய கண்டுபிடிப்புகளின் தொகுப்பாக வெளிவருகின்றது.

'தலங்காவல் உரிமை - தீர்வு ஓலை ஆவணங்கள்' என்ற கட்டுரை, பொதும்பு என்ற கிராமத்தின் தலங்காவல் உரிமை தொடர்பாக இரு பிரிவினரிடையே ஏற்பட்ட வழக்கு மூன்று தலைமுறையாகத் தொடர்ந்ததைப் பற்றி விளக்குகிறது.

'கல்வெட்டுகளில் பிரதோஷம்' விழா பற்றிய செய்தியை ஒரு கட்டுரை கூறுகிறது. 'திருநட்டக் கணப்பெருமக்கள்' என்ற சபை ஆடவல்லானான நடராசர் பெயரால் அமைக்கப்பட்டுள்ளச் செய்தியினை கல்வெட்டு ஆதாரங்களுடன் மற்றொரு கட்டுரை விளக்கம் தந்துள்ளது.

கிரந்த எழுத்துக்களின் பழமை மற்றும் அதன் முக்கியத்துவம் பற்றிக் கூறும் ஒரு கட்டுரையும், தமிழகத்தில் கண்டறியப்பட்டுள்ள புத்த சமய எச்சங்கள் மற்றும் 'மனோரா' நினைவுச் சின்னம் என இரு ஆங்கிலக் கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன.

கி.பி. 12-ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியுடன் கூடிய அரிய தாழி ஒன்றினைப் பற்றி செய்தித் தொகுக்கப்பட்டுள்ளது.

பெருங்கற்காலம் மற்றும் இரும்புக் காலத்தைச் சேர்ந்த ஈமச்சின்னங்கள் ஈரோடு மாவட்டம் சத்தியமங்கலம் வட்ட வனப்பகுதி மற்றும் கிருட்டினகிரி மாவட்டம் தளிப்பகுதிகளில் புதியதாகக் கண்டறியப்பட்ட செய்திகளையும், கரூர்ப் பகுதி தீண்டாக்கல் மலையில் உள்ள சமணப் படுக்கைகள், கொத்தமங்கலம் ஐயனார் சிற்பம், வடக்காலத்தூர் பல்லவர்காலத் திருமால் சிற்பம், பரமார்த்தலிங்க புரம் 'மைல்' கல்வெட்டுகள் ஆகிய அரிய செய்திகளையும் வெளியிட்டுள்ளோம்.

இவ்விதழில் வெளிவந்துள்ள செய்திகள் அனைத்தும் வரலாற்று ஆய்வுக்குத் தேவையான அடிப்படைத் தரவுகளாகும். எனவே வரலாற்று ஆய்வாளர்களுக்கும் ஆர்வலர்களுக்கும் மிகுந்த பயனுடையதாயிருக்கும் என்பதில் ஐயமில்லை.

சீதாராம் குருமூர்த்தி
முதன்மை ஆணையர்

உள்ளே . . . பக்கம்




# தலங்காவல் உரிமை - தீர்வு ஓலை ஆவணங்கள்

**சொ. சாந்தலிங்கம்**
தொல்லியல் அலுவலர், நாகர்கோவில்

அண்மையில் மதுரைக்கு அருகில் அதளை கிராமத்திலிருந்து சில ஓலைச்சுவடிகள் எம் பார்வைக்கு வந்தன. இரண்டு கட்டுகளில் மொத்தம் இருபத்தைந்து ஓலை ஆவணங்கள் அவற்றில் இருந்தன. ஆள் அடிமை ஓலைகள், ஒத்தி முறிகள், கிரைய முறிகள் ஆகியவை அவற்றுள் அடங்கும். இவற்றில் குறிப்பிடும்படியாகப் பொதும்பு என்ற கிராமத்தின் தலங்காவல் உரிமை தொடர்பாக நான்கு ஓலைகள் உள்ளன. இக்கிராமத்தின் தலங்காவல் உரிமை யாருக்கு என்பதில் இரு பிரிவினரிடையே வழக்கு ஏற்பட்டு அதனைத் தீர்ப்பதற்கு சுமார் 44 ஆண்டு காலம் ஆகியுள்ளது. மூன்று தலைமுறையினர் இவ்வுரிமை தொடர்பாகத் தொடர்ந்து போராடி வந்துள்ளனர். கி.பி. 1771 முதல் கி.பி. 1814 வரை பல பஞ்சாயத்து கள் (கிராம நீதிமன்றங்கள்) கூடிப் பல தீர்வுகள் சொல்லியுள்ளன. இறுதியாக 1814-ல் இரு பிரிவினரும் தங்களுக்குள் சமாதானமாகி வழக்கைத் திரும்பப் பெற்றுக் கொண்டுள்ளனர். இந்த நான்கு ஓலை ஆவணங்களையும் காலவரிசைக்கிரமப்படி ஆய்வு செய்ததில் பல சுவையான செய்திகள் கிடைக்கின்றன. அவற்றைக் கீழே காணலாம்.

**வழக்கில் ஈடுபட்ட இரு பிரிவினர்**



முதல் ஏட்டின்படி கர வருசம் வைகாசி மாதம் 4-ஆம் தேதியில் பரவை கிராமத்தில் ஆலமரத்தடியில் பஞ்சாயத்தார் கூடி ஒரு தீர்ப்பு வழங்கியுள்ளனர். கர வருசத்திற்குச் சரியான ஆங்கில ஆண்டு கி.பி. 1770-1771 ஆகலாம். இக்கூட்டத்தில் பரவை, துவரிமான், விளாங்குடி, வண்டியூர், சமயநல்லூர், நெடுங்குளம், அதளை, அரையூர், பொதும்பு, பாப்பாக்குடி என்னும் பத்து கிராமத்தைச் சேர்ந்த பல நடுவர்கள் கலந்துகொண்டுள்ளனர். ராசத்தேவன் மகன் மாயாண்டியும், சோணைத்தேவன் மகன் வீரணன் ஆகிய இருவரும் ஒரு கட்சியாகவும், வீரப்பன் சேர்வை மகன் முத்துவீரத்தேவன் மற்றொரு கட்சியாகவும் கரையேறி வழக்குத் தொடுத்துள்ளனர். பொதும்பு அதைச் சேர்ந்த உள் கிராமங்கள் உடந்தைக்குளம், மணியஞ்சி, கல்குளம் ஆகிய கிராமங்களில் தலங்காவல் உரிமையை இரு பிரிவினரும் சரிபாதியாக அனுபவிப்பது எனத் தீர்ப்புக் கூறப் பட்டது. இதனை ஏற்காதவர்கள் அரண்மனைக்கு (சிறுவாலை சமீன்) 24 பொன்னும் கொடுத்துக் காணியாட்சி உரிமையும் இழந்து போவார் எனத் தீர்ப்புக் கூறப்பட்டது.

இரண்டாவது ஏட்டின்படி (கி.பி. 1802) முதலில் கூறப்பட்ட (கி.பி. 1770) தீர்ப்புக்கு மாறாக மீண்டும் வழக்கு எழுந்தது. இதில் சிறுவாலை ஜமீன்தார் அச்சுராமக் கவுண்டர் தலைவராக அமர்ந்து விசாரித்தார் (துன்மதி வருசம் வைகாசி மாதம் 29-ஆம் தேதி). இதில் வழக்காடியவர்கள் மாயாண்டி சேர்வையும், சங்கிலி சேருவையுமாகும். இருவர் வசமும் இருந்த சருகை, சாதனப் பட்டயங்கள் பரிசீலிக்கப்பட்டன. இருவர் வாய்மொழியும் கேட்கப் பட்டன. இருவருடைய பட்டயத்தையும் கொதிக்கும் நெய்யில் போட்டு எடுப்பது என்று யோசனை கூறப்பட்டு 4 மாதம் 28 நாள் வாயிதா சொல்லப்பட்டது. சங்கிலியுள்ளிட்டார் நெய்யில் பட்டயத்தைப் போட இசையவில்லை. மாயாண்டி அதற்கு இசைந் தார். இதனால் மாயாண்டி நிசமனுசன் என்றும் சங்கிலியின் பட்டயம் கள்ளப் பட்டயமென்றும் முடிவு செய்து பொதும்பு காவல் உரிமை முழுமையும் மாயாண்டிக்கே உரியது எனத் தீர்ப்புக் கூறப் பட்டது. இக்கூட்டத்தில் வயிரவநத்தம், உடந்தைக்குளம், அம்பலத்தாடி, சம்பைக்குளம், பறளி, திருவேடகம், செல்லக் கவுண்டன்பட்டி ஆகிய ஊர்களின் நாட்டாண்மைக்காரர்கள் கலந்து கொண்டு கையொப்பம் இட்டனர்.

மூன்றாவது ஏட்டின்படி, முந்தைய பஞ்சாயத்து கூடிய பின் சரியாக ஒரு மாதத்திற்குள் துன்மதி வருசம் ஆனி மாதம் 25-ஆம் நாள் (கி.பி. 1802 ஜூலை 4-ஆம் தேதி) சமயநல்லூர் விநாயகர் கோயில்

முன்பாக மீண்டும் ஒரு பஞ்சாயத்துக் கூடியது. இதில் சமயநல்லூர் மகாசனம் அண்ணாவய்யர், அப்பாக்குட்டி அய்யர், சுந்தரமய்யர், சங்கமய்யர், விசுவநாதய்யர், குமரன் சுப்பையர், காவல் சங்கிலி சேருவை, பெரியகருப்பத்தேவன், தேனூர் நாட்டாமை சமைய நாயகம் பிள்ளை, பரவை நாட்டாமை சங்கிலியா பிள்ளை, தோடனேரி நாட்டாமை அய்யம் பெருமாள் பிள்ளை ஆகியோர் கூடியிருந்தனர். இதிலும் சங்கிலி சேருவை ஒரு கட்சியாகவும், மாயாண்டி ஒரு கட்சியாகவும் நின்று வழக்குரைத்தனர். பொதும்பு கிராமத்தின் காவல் மானியம் தொடர்பாக இதுவரை நடைபெற்ற விசாரணைகளையெல்லாம் இக்கூட்டம் பரிசீலித்தது. சாதனப் பட்டயங்கள், தீருவை ஓலைகளும் ஆராயப்பட்டன. திருப்பாலை கிராமம் உள்ளிட்ட பத்து கிராமமும் கூடித் தீர்த்த தீர்வுப் பட்டயம் பார்த்து அதில் கூடிய பஞ்சாயத்தாரும் விசாரிக்கப்பட்டனர்.

இவ்வழக்கு தொடர்பாக முன்பு ஒரு முறை சித்திரா பத்தி (சித்திரா பவுர்ணமி) யன்று மதுரை மீனாட்சி கோயில் மீனாட்சி நாயக்கர் மண்டபத்தில் பாளையப்பட்டுத் தாசில் நாராயணராயர் தானாபதியை அழைத்து நடத்திய தீர்வைப் பத்திரமும் பார்க்கப் பட்டது. மருதங்குடியில் தீர்த்த ஓலையும் பரிசீலிக்கப்பட்டது. முன் ஓலையில் சொல்லப்பட்ட சிறுவாலை ஜமீன் அச்சுராமக் கவுண்டர் தீர்ப்பும் ஆராயப்பட்டது. சிறுவாலை மணியக்காரன், தானாபதி, கணக்கப்பிள்ளை யிந்த மூன்று பேருடைய வாக்குமூலங் களும் பெறப்பட்டன. பொதும்பையைச் சுற்றியுள்ள கிராமங்களில் இருக்கிற நாட்டாமை, நாட்டுக் கணக்கு, தோட்டி, மடையன், கொல்லன், தச்சன், குசவன் ஆகியோருடைய வாக்குமூலங்களும் பெறப்பட்டன.

அனைத்து விபரங்களையும் பரிசீலித்த பஞ்சாயத்தார் 'இருபேருக்கும் அனுபோகம், அறிவு, அத்தாட்சியும், தாக்கலும் பார்த்து பொதும்பு உள்ளிட்ட மூன்று கிராமங்களின் தலங்காவல் உரிமையை ஆளுக்குப் பாதியாக அனுபவித்துக் கொள்வது' எனத் தீர்ப்புக் கூறினர். இதில் முற்கூறப்பட்ட அனைத்து நாட்டாண்மையினரும் கையொப்பமிட்டுள்ளனர்.

நான்காவது ஓலை ஆவணத்தின்படி மேற்கண்ட தீர்ப்பும் பின்னாளில் நடைமுறைக்கு வராமல் சங்கிலி சேர்வை மகன் குப்பையாண்டி நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்துள்ளான். அவ் வழக்கிலிருந்து விலகி சமாதானமாகப் போவதாக கி.பி. 1814-ஆம்

ஆண்டு சூன் மாதம் 20-ஆம் தேதி (பவ வருசம் ஆனி மாதம் 2-ஆம் தேதி) ஓலைப் பட்டயம் எழுதிக் கொடுத்துள்ளான். இதன் மூலம் இவ்வழக்கு ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் (வக்கீல்கள்) வழக்கறிஞர் களைக் கொண்டு நடத்தப்பட்டது என்பதும் தெரியவருகிறது. வழக்கைத் திரும்பப் பெற்றுக்கொண்ட குப்பையாண்டி தனது ஓலை யில் தலங்காவல் உரிமையை இரண்டு குடும்பத்தாரும் நெடுகவும் பேர் பாதியாக அனுபவித்து வந்ததாகவும் ஒத்துக் கொண்டுள்ளார்.

மேற்கண்ட நான்கு ஓலை ஆவணங்களும் ஒரே பொருள் பற்றியதாகவும், தொடர்ந்து 40 ஆண்டுகளுக்கும் மேலாக ஒரு வழக்கு எவ்வாறு கொண்டு செல்லப்பட்டுள்ளது என்பதையும், பின் ஒரு கட்சியினரின் மனமாற்றத்தால் எப்படிச் சுமுகத்தீர்வுக்கு வந்தது என்பதைக் காட்டுவதாகவும் உள்ளதால் இவ்வோலை ஆவணங்கள் மிகுந்த முக்கியத்துவம் பெறுகின்றன. சுமார் இரு நூறு ஆண்டுகளுக்கு முந்திய மதுரை மாவட்டத்துக் கிராமங்களின் சமூகப் பொருளாதார, நில, நீர், நீதி நிர்வாக முறைகளைக் காட்டுவனவாக இவ்வோலை ஆவணங்கள் உள்ளன. ஒரு குறிப் பிட்ட கிராமத்தைச் சேர்ந்த வழக்கை விசாரிக்கப் பல்வேறு கிராமங் களிலிருந்தும் நாட்டாண்மைக்காரர்கள் கலந்து கொண்டுள்ளனர் என்பதும் நோக்கத்தக்கது

4 ஓலை ஆவணங்களில் 3-ஆவது ஓலை ஆவணம் மட்டும் கீழே தரப்பட்டுள்ளது.

### மூன்றாம் ஓலை ஆவணம்

1. 1802 ஆம் வருசம் சூலை மாசம் 4ந் தேதி தமிழ் துன்மதி வருசம் ஆனி மாதம் 25 தேதி சமய நல்லூரில் மகாசனம் அண்ணாவய்யர் அப்பாக்குட்டி அய்யர் சுந்தரமய்யர் சங்க மய்யர் விசுவநாதய்யர் குமரன் சுப்பய்யர் காவல் சங்கிலி சேருவை பெரியகருப்பத் தேவன்

2. தேனூரில் நாட்டாமை சமைய நாயகம் பிள்ளை பரவை நாட் டாண்மை சங்கிலியாபிள்ளை தோடனேரி நாட்டாண்மை அய்யம் பெருமாள் பிள்ளை இத்தாகிய பேரும் கூடி பஞ்சாயத்தில் சமயநல்லூரில் வினாயகன் கோயில் முன்ம்பாக

3. யிருந்து பொதும்பு தலத்துக் காவல் விபகாரமாய் ஷை கிராமம் சங்கிலி உள்ளிட்டாரும் மாயாண்டி உள்ளிட்டாரும் கும்பினி சறுக்கார் உத்திரவுப்படிக்கு இருபேரும் வந்து கரையேரி இருவாய்மொழியுங் கேட்டு இருபேர் கிட்டயிருந்த சாதனமும்

4. பட்டையங்களும் செம்புப்பட்டையமும் தீருவை ஓலையளும் பார்த்து இருபேர்கிட்ட வாக்குமூலமும் வாங்கி அதினுட வர்த்தமானங்களும் பார்த்து திருப்பாலை மண்டில பத்து கிராமமும் கூடி தீத்த தீருவை பத்திரமும் பாத்து அதில் கூடிய பஞ்சாயத்தாரை இரு

5. பேருஞ் சாட்சி கூட்டி வந்த பஞ்சாயத்தார் வாக்குமூலம் வாங்கிக் கொண்டு சித்திராவுத்திக்கு மதுரையில் மீனாட்சி நாயக்கன் மண்டபத்தில் பாளையப்பட்டுத் தாசில் நாராயணராயரவர்கள் தானாபதியை அளைச்சு வச்சு தீர்த்த தீருவை பத்திரமும் பாத்து அந்த பஞ்சாயி

6. த்தில் இருந்தபேர் இருபேரும் கூட்டி வந்த சாட்சியர்களிடத் திலும் வாக்குமூலம் வாங்கிக் கொண்டு மருதங்குடியில் தீத்த கண்ட பத்திரமும் பாத்து துன்மதி வருசம் சிறுபாலை அச்சு ராமக்கவுண்டர் முன்பாக தீர்த்த தீருவைப் பத்திரமும் பாத்து அதில்

7. பஞ்சாயத்தில் கூடிய பேர் வாக்குமூலமும் வாங்கிக் கொண்டு சிறுவாலை மணியக்காறன் தானாபதி கணக்கப்பிள்ளை யிவர்கள் மூன்று பேருடைய வாக்குமூலமும் பாத்துக் கொண்டு பொதும்பைய் சுத்திய கிராமங்கள் இருக்கிற பேருடைய வாக்கு

8. மூலம் வாங்கிப் பாத்துக் கொண்டு பொதும்பு நாட்டாண்மை நாட்டுக் கணக்கு தோட்டி மடையன் கொல்லன் தச்சன் குசவன் இவர்களுடைய வாக்குமூலம் வாங்கிப் பாத்துக் கொண்டு கூடிய பஞ்சாயத்தார் சங்கிலி உள்ளிட்டாருக்கும் மாயாண்டி உள்ளிட்டாருக்கும்

### பின்பக்கம்

1. தீத்த தீருவையென்ன வென்றால் பொதும்பில் முன் முத்தன் சேருவைக்காரன் அரமணையார்கிட்ட குதிரை சுருட்டி வாங்கி காவல் சேருவை ஆளுகிற போது வீரப்பன் சேருவைகாரன் கூட காவல் ஆண்டு வந்தான் முத்தன் சேருவைக்காரன் ரெண்டு பெண்

2. கலியாணம் பண்ணி அவனுக்குப் பிள்ளையில்லாமல் அடஞ்சு போன படியினாலே அவனுக்குச் சோதரம் தாயாதி மாயாண்டி ஒடை அண்ணன் சித்திரன் கொள்ளிவச்ச படியினாலேயும் முத்தன் சேருவைக்காரனுடனே காவல் பொதும்பு மணியஞ்சி

3. உடந்தைக்குளம் இந்த மூணு கிராமமும் வீரப்பன் சேருவைக் காரன் அவனுட மகன் முத்துவீரத்தேவன் அவனுட மகன் சங்கிலியும் காவல் ஆண்டு வந்தபடியினாலேயும் இருபேருக்கும் அனுபோகம் அறிவு அத்தாட்சியும் தாக்கலும் பாத்து இந்த மூணு கிராமமும் சங்கிலி

4. உள்ளிட்டாருடைய பாதியும் - மாயாண்டி உள்ளிட்டாருடைய பாதியும் தலத்துக் காவலுக்கு உண்டான நஞ்சை புஞ்சை தோட்டம் துரவு சோலி சுவந்தரம் கட்டுத்தளுக்கு பணம் மாவடை மரவடை யிதுமுதலாகிய காவலுக்கு உண்டான யெற்பேற்

5. பட்ட சுவந்தரம் இருபேரையும் பேர் பாதியாக ஆண்டு அனு பவித்துக் கொள்ளச் சொல்லி தீத்தோம் இந்தப்படிக்கு இதுவே தீருவை தீருவைப் பத்திரமாகக் கட்டிக் கொள்ளவும் இவர்கள் முன்னுக்கு யிந்த தீருவைப் பத்திரம் எழுதினது சமய நல்லூர் கிராமம்

6. கணக்கு சங்கரமூர்த்தி கையெழுத்து பஞ்சாயத்தார் அண்ணா வய்யன் அப்பாவய்யன் சுந்தரமய்யன் சங்கமய்யன் சுப்பய்யன் காவல் சங்கிலி பெரிய கருப்பத்தேவன் பரவை ஊமச்சி குளம் நாட்டாண்மை சங்கிலியா பிள்ளை தேனூர் நாட்டாண்மை சமைய நாயகம்

7. தோடனேரி நாட்டாண்மை அய்யம் பெருமாள்.

---

குறிப்பு:- இவ்வோலை ஆவணங்களை என் பார்வைக்குக் கொடுத்த அவற்றின் உரிமையாளர் அதளை கிராமம் திரு. எஸ்.வி.பி. நடராசன் அவர்களுக்கு நன்றி.

2

# கல்வெட்டில் பிரதோஷம்

**முனைவர். செந்தில்செல்வக்குமரன்**
தொல்லியல் அலுவலர்
திருநெல்வேலி

தமிழகத்தில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படும் அரை மாத விழாக்களில் (பட்ச விழா) பிரதோஷமும் ஒன்றாகும். இன்றளவில் அதிக மக்கள் கூட்டத்தை ஈர்க்கும் மிகச் சிறப்பான விழாவாக இது கொண்டாடப்படுகின்றது. சிவன் கோயில் அனைத்திலும் 13-ஆம் நாளன்று (திரையோதசி) மாலை வேளையில் இவ்விழா கொண்டாடப்படுகின்றது. நந்தியினுடைய செறுக்கினை அடக்கு வதற்காக அதன் இரு கொம்புகளிடையே சிவபெருமான் நின்று ஆடிய வேளையே பிரதோஷமாக கொண்டாடப்படுகின்றது.

சிவபெருமான் நந்தியின் தலையில் நின்று ஆடிய பொழுது, தேவர்களும், அனைத்து தெய்வங்களும், தேவ கணங்களும் ஒன்று கூடி நின்று அந்தக் காட்சியினை அச்சத்துடனும் மகிழ்வுடனும் பார்த்ததால் அவ்வேளையில் சிவபெருமானை தரிசித்தால் அனைத்து தெய்வங்களுடைய அருளும் கிட்டும் என்பதால் பிரதோஷம் மக்களை ஈர்க்கும் விழாவாக விளங்கி வருகிறது. இவ்விழா மாதத்தில் இருமுறையாக தேய்பிறை 13-ஆம் நாளன்றும் வளர்பிறை 13-ஆம் நாளன்றும் கொண்டாடப்படுகின்றது. நந்தியின் ஆணவத்தை அடக்கிய சிவபெருமான் அவர்க்கு அருளும் வழங்கிய தால் பிரதோஷத் திருவிழா நந்திக்குரிய திருவிழாவாக எடுக்கப் படுகின்றது. மக்கள் தங்கள் கோரிக்கைகளை பிரதோஷ விழா முடிந்த பின்னர் நந்தியின் காதுகளில் தம் வேண்டுதல்களைக் கூறுகின்றனர். நந்தி, அவர்களின் கோரிக்கைகளை இறைவனிடம் கூறி நிறைவேற்றி வைப்பார் என்பது நம்பிக்கை. பிரதோஷ வேளையில் கோயிலை அப்பிரதக்ஷணம் ஆகச் சுற்றுவதைச் சிலர் கடைப்பிடிக்கின்றனர்.

அண்மையில் தொல்லியல் துறை கல்வெட்டு முனைப்புத் திட்டத்தின் கீழ் கல்வெட்டுகளைப் படியெடுத்த போது மூன்று ஊர் கல்வெட்டுகளில் பிரதோஷம் பற்றிய குறிப்பு வந்தது. கல்வெட்டு குறிப்பிடும் பிரதோஷ விழாபற்றி ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## திருப்புடைமருதூர்க் கோயில் கல்வெட்டு

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள திருப்புடைமருதூர்க் கோயிலில் உள்ள கொல்லம் 661-ஆம் ஆண்டு கல்வெட்டு (கி.பி.1485) முழுவதுமாக பிரதோஷ பூஜைக்காக வழங்கப்பட்ட தானத்தைப் பற்றிச் சிறப்பாக எடுத்துக் கூறுகிறது. இந்தக் கல்வெட்டு அந்த ஆண்டு மார்கழி 17-ஆம் தேதி முதல் பிரதோஷ விழா நடக்க ஏற்பாடு செய்ததைத் தெரிவிக்கின்றது. பணியாரம், கறியமுது, மிளகு அமுது, உப்பு அமுது, எண்ணெய் ஆகியவற்றை வழங்குவதற் காகப் பிரதோஷம் ஒன்றுக்கு இருநாழி அரிசி வழங்கியதைத் தெரிவிக்கின்றது. மேலும் பிரதோஷ நாளன்று, மார்த்தண்டன் வீர கேரளன் குட்டி அமைத்த பிறைச்சாலையில் பிரதோஷம் தோறும் ''நீர் ஆகாரம்'' வழங்க வேண்டும் என்பது குறிப்பிடத் தக்க செய்தியாகும். எனவே பிரதோஷ விழாவில் விரதம் இருந்தவர்களுக்கு விரத காலம் முடிந்ததும் நீராகாரம் வழங்கி யிருக்கலாம் எனக் கருத இடமுண்டு

பிரதோஷம் தோறும் நீராகாரத்திற்காக ''இருநாழிச் சோறு'' மார்த்தண்டன் வீர கேரளன் குட்டி கற்பித்த தொண்டர்கள் வசம் கொடுக்கும் படியும் இக்கல்வெட்டு கூறுகின்றது. இதில் கோடக நல்லூர், காலப்போக்கில் இருக்கிற கல்லூர், சிங்கிகுளம், சடையங் குளம் ஆகிய இடங்களில் பிரதோஷ பூஜைக்காக நிலம் வழங்கியது குறிப்பிடப்படுகின்றது.

## நத்தம் கோயில் கல்வெட்டு

திருநெல்வேலி அருகிலுள்ள நத்தம் சிவன் கோயிலில் உள்ள கொல்லம் 690-ஆம் ஆண்டு கல்வெட்டு பிரதோஷ பூஜை (கி.பி 1514) பற்றிக் குறிப்பிடுகின்றது. இக்கோயிலில் குடிகொண்டிருக்கும் இறைவன் திருவக்னீஸ்வரமுடைய நாயனார் எனக் கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்றார். மலை மண்டலத்தைச் சார்ந்த பிணையரை பண்டாரம், பனையன் விக்கிரம நாகன் என்பவன் பிரதோஷ பூஜைக்கு 22 பணம் தானமாகக் கொடுத்தான் என்பது கல்வெட்டுச் செய்தியாகும். மேலும் பிரதோஷம் என்பதை கல்வெட்டில் பிரதோழ பூஜை என்று தமிழ்ப்படுத்திக் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். மாதம் இரண்டு பிரதோஷ பூஜை நடந்ததை ''மாதம் இரண்டு பிரதோழ சீபெலி நடத்திக் கொள்வாராகவும்'' என்று கூறுவதன் மூலம் அறியலாம். மேலும் சந்தியாதீபத்திற்குக் கொடி விளக்கு

ஐந்தும், அது எரிவதற்காக எண்ணெய் உரியும் வழங்கப்பட்டிருப் பதை இக்கல்வெட்டு தெரிவிக்கின்றது. பிரதோஷ பூஜை நடைபெறும் போது சந்தியா தீபம் சிறப்பாக எரிய வேண்டும் என்பதை இரண்டு கல்வெட்டுகளும் தெளிவுற எடுத்துக் கூறுகின்றன.

## நெல்லையப்பர் கோயில் கல்வெட்டு

நெல்லையப்பர் கோயிலில் உள்ள கொல்லம் 1063-ஆம் ஆண்டுக்(கி.பி.1887) கல்வெட்டு அம்மன் கோயிலிலும் பிரதோஷ விழா நடைபெற்றதை எடுத்துக் கூறுகின்றது. இதில் ஆண்களும் பெண்களுமாகப் பணம் தானமாக வழங்கியதைத் தெரிவிக்கின்றது. இக்கல்வெட்டு பூர்வபக்ஷ மேற்படி பிரதோஷ கட்டளைக்கு மட்டும் தானம் வழங்கியதைத் தெரிவிக்கின்றது. ஒரு பிரதோஷத்திற்கு ரூ.$2\frac{1}{4}$ வீதம் ஆண்டு ஒன்றுக்கு 27 ரூபாய் செலவு செய்து பிரதோஷம் நடத்த வேண்டும் என்று கூறுகின்றது. இதற்காகக் கோடகநல்லூர் கிராமத்தில் 61 சென்ட் நிலம் தானமாக வழங்கியதைத் தெரிவிக்கின்றது. மேலும் கல்வெட்டின் இறுதியில் தெரிசனத்திற்கு வரும் புண்ணியசாலிகள் மேற்கண்ட ரூ. $2\frac{1}{4}$ சரியாக செலவு செய்யப்படுகின்றதா என்று கவனிக்க வேண்டும் என்று கூறி யிருப்பது தர்ம காரியங்களுக்கு அனைவரும் பொறுப்பு ஏற்க வேண்டும் என்று குறிப்பிடுவதாகத் தெரிய வருகின்றது. மேலும் இப்பிரதோஷ பூஜை நடைபெறக் காரணமாக இருந்த மகாராஜ பிள்ளை என்பவர் இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டதன் பின்னர் ''பிரதோஷம் மகாராஜபிள்ளை'' எனப் பெயர் பெற்றார் என்று தெரிய வருகின்றது.

அம்மன் கோயிலில் பிரதோஷ விழா நடைபெற்றதற்கும், வளர்பிறை பிரதோஷம் சிறப்பாகக் கருதப்பட்டதற்கும் இக் கல்வெட்டே சான்றாகின்றது. 16-ஆம் நூற்றாண்டிலிருந்து 19-ஆம் நூற்றாண்டு வரை சிறப்பாக நடைபெற்ற பிரதோஷ விழா இடையில் தடைப்பட்டு 21-ஆம் நூற்றாண்டு தொடக்கத்தில் மறுபடியும் சிறப்பு அடைந்துள்ளது என்பதை அறியலாம். பிரதோஷ விழா வரலாற்றை அறிய இக்கல்வெட்டுகள் உதவு கின்றன என்று கூறலாம்.

* இக்கல்வெட்டுப் படிகள் திருநெல்வேலி தொல்லியல் அலுவலர் அலுவலகத்தில் உள்ளன.





# திருநட்டக் கணப்பெருமக்கள்

**இரா. சிவானந்தம்**
கல்வெட்டாய்வாளர், சென்னை-8.

பண்டைக் காலங்களில் ஊர்களையும் கிராமங்களையும் நிர்வகித்த குழுவிற்கு ஆளுங்கணம் என்று பெயர் வழங்கப்பெற்றது. சிறிய நிர்வாகக் குழு 'கணம்' என்றும் பெரிய நிர்வாகக் குழு 'மீயாளுங்கணம்' என்றும் அழைக்கப்பட்டுள்ளது.[1]

கணம் என்பதற்குத் தொகுப்பு, கூட்டம், திரண்டோர் எனப் பொருள் குறிப்பர்.[2] வடமொழி அகராதியில் 'கணம்' என்பதற்கு கூட்டம் என்றே பொருள் கூறப்பட்டுள்ளது.[3] சங்க இலக்கியத்தில் பேய்க்கணம், நரிக்கணம் ஆகிய குறிப்புகள் காணப்படுகின்றன.[4] 'பேயும் பூதமும் பாம்பும் ஈறாகிய பதினெண் கணம்' என்ற தொல்காப்பியப் பொருளதிகார உரையாலும் கணம் என்பது கூட்டம் என்ற பொருளிலே சுட்டுகிறது.

கணம், யாளுங்கணம், மீயாளுங்கணத்தின் உறுப்பினர்கள் கணப்பெருமக்கள், கணவாரியப் பெருமக்கள், யாளுங்கணத்தார் என்று அழைக்கப்பட்டுள்ளனர்.

காளி கணத்தார், சாத்த கணத்தார், குமார கணத்தார், கிருஷ்ண கணத்தார், வீர கணத்தார் போன்ற கணத்தார்கள் சிறிய கோயில்களை நிர்வகிக்கும் நிர்வாக குழுவினர். இக்கணத்தார் குழுக்கள் அவ்வவ் இறைவனைப் பொதுவாக அறியும் பெயர்களிலே அழைக்கப்பட்டுள்ளனர். அதேபோல் கார்த்திகை கணத்தார், திருவோண கணப்பெருமக்கள், திருவாதிரை கணப்பெருமக்கள், துவாதசி கணப்பெருமக்கள், புண்ணிய கணத்தார், அம்ருத கணத்தார் ஆகியோர் ஒரு குறிப்பிட்ட செயலுக்காகச் செயல்படும் குழுவினராகச் செயல்பட்டுள்ளனர்.[5] மேற்கண்ட கணப்பெருமக்கள் குழுவைப் பற்றிப் பல கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

கடலூர் மாவட்டத் தலைநகராகிய கடலூர் என்றழைக்கப் படுகின்ற திருப்பாதிரிப்புலியூரில் உள்ள பாடலீஸ்வரர் கோயிற் கல்வெட்டுகளில் திருநட்டக் கணப்பெருமக்கள் என்ற குழுவைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. ஆனால் மற்ற ஊர்க் கல்வெட்டுகளில் இக்குழுவைப் பற்றிய குறிப்புகள் இதுவரை

அறியப்படவில்லை. திருநட்டக் கணப்பெருமக்கள் என்ற இக்குழு, எந்த இறைவனின் பெயரால் அமைக்கப்பட்டுள்ளது அல்லது எச்செயலுக்காக அமைக்கப்பட்டது என்பதை அறிய முயல்வோம்.

இக்கோயிலில் உள்ள முதலாம் பராந்தகச் சோழனின் 18-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் 'திருநட்டக் கணப்பெருமக்கள்' பற்றிய குறிப்பு முதன் முதலாகக் காணப்படுகின்றது.[6] ஆனால் இதே பராந்தகச் சோழனின் மற்றொரு 18-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் 'திருவுண்ணாழிகை கணப்பெருமக்கள்' பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.[7] மேலும் இவனது 3-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் இக்குழு வெறும் 'ஸபையார்' என்றே அழைக்கப் பட்டுள்ளது.[8] மேலும் பராந்தகனைத் தொடர்ந்து முதலாம் இராசராசனின் 4-ஆவது மற்றும் 14-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு களிலும் திருநட்டக் கணப்பெருமக்கள் பற்றிய குறிப்புகள் காணப் படுகின்றன.[9] எனவே இக்கோயிற் கல்வெட்டுகளில் காலத்தால் முந்திய பராந்தகனின் 3-ஆம் ஆட்சியாண்டில் கோயில் நிர்வாகக் குழுவினர் ஸபையார் என்றும் 18-ஆவது ஆட்சியாண்டில் திருவுண்ணாழிகைப் பெருமக்கள் என்றும் பின்னர் இதே ஆட்சியாண்டில் திருநட்டக் கணப்பெருமக்கள் என்றும் இக்குழு பெயர் மாற்றம் அடைந்துள்ளது. திருநட்டக் கணப்பெருமக்கள் என்ற இக்குழு இராசராசனின் 14-ஆவது ஆட்சியாண்டு வரை தொடர்ந்துள்ளது என்பதை இக்கோயிற் கல்வெட்டுகளால் அறிய முடிகிறது. இதனைத் தொடர்ந்து வரும் பிற்காலச் சோழர் கல்வெட்டுகளில் இக்குழுவைப் பற்றிய செய்திகள் காணப்பட வில்லை. பிற்காலச் சோழர் காலங்களில் கணப்பெருமக்கள் என்ற குழு அமைப்பு மறையத் தொடங்கிவிட்டது என்பது வரலாற்று அறிஞர்களின் கருத்தாகும்.

முதலாம் பராந்தகன் தொடங்கி முதலாம் குலோத்துங்கன் ஆட்சி வரை இவ்விறைவனது பெயர் திருக்கடைஞாழல் உடையார் என்றும் விக்கிரமசோழன் தொடங்கி விக்கிரம பாண்டியன் ஆட்சி வரை தோன்றாத்துணை ஆளுடையார் என்றும் அழைக்கப் பட்டுள்ளது. பின்னரே பாடலீஸ்வரர் என்ற பெயர் பெற்றுள்ளது. இவ்வூர் பராந்தகன் காலம் முதல் இராசராசன் காலம் வரை பாதிரிப்புலியூர் என்றும் முதலாம் இராசேந்திரனின் மகனான இராசமகேந்திரன் காலம் தொடங்கி இவ்வூர் திருப்பாதிரிப்புலியூர் என்றும் வழங்கியுள்ளதைக் கல்வெட்டுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. இவ்வூரின் பெயர் அன்று முதல் இன்று வரை பாதிரிப்புலியூர் மற்றும் திருப்பாதிரிப்புலியூர் என்றே அழைக்கப்படுகிறது.

நட்டணை என்பது கூத்து என்று திவாகரம் பொருள் கூறுகிறது. நாட்டியம் பழக்கி ஆட்டுவிக்கும் தொழிலை நட்டுவம் என்றும் நாட்டியம் ஆட்டுவிப்போர் நட்டுவன் என்றும் அழைக்கப் படுகின்றனர். மேலும் நட்டராகம், நட்டபாடை என்பவை குறிஞ்சிப் பண்களாகும். இவற்றிலிருந்து நட்டம் என்பது நடனத்தைக் குறிக்கின்றது என அறியமுடிகிறது. இதனைத் திருஞானசம்பந்தர் தாம் பாடிய தேவாரப் பதிகத்தில்

''கொட்டும் பறைசீராற் குழும வனலேந்தி
நட்டம் பயின்றாடு நல்லூர்ப் பெருமானை
முட்டின் றிருபோது முனியா தெழுந்தன்பு
பட்ட மனத்தார்க ளறியார் பாவமே''

- திருஞான. தேவாரம் 1 : 86 (திருநல்லூர்)

என நட்டம் பயின்றாடும் நல்லூர் பெருமானைக் குறிக்கின்றார். திருநல்லூர்க் கல்வெட்டில் ''இக்கோயில் நட்டம் பயின்றாடு நாயனார்க்கு திருஅத்தசாம காலத்து அமுது செய்தருள திருஅமுது அரிசி உள்ளிட்டனவற்றுக்கு'' என்ற கல்வெட்டுக் குறிப்பாலும் அறிகின்றோம்.[10]

நட்டத்தின் நாயகனை 'நடராசர்' என்றும் 'ஆடவல்லான்' என்றும் அழைக்கின்றோம். மேலும்

''நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே''

(திருவாசகம் 1 : 89-90)

என்றும்

''மாலுக்கு சக்கரம் அன்றருள் செய்தவன்
மன்னிய தில்லை தன்னுள்
ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற சிற்றம்
பலமே இடமாகப்
பாலித்து நட்டம் பயிலவல் லானுக்கே
பல்லாண்டு கூறுதுமே''

- (சேந்தனார் திருப்பல்லாண்டு-9,
9-ஆம் திருமுறை 29 : 9)

என்றும் ஆடவல்லான் புகழப்படுவது நோக்கத்தக்கது. எனவே திருப்பாதிரிப்புலியூர்க் கோயில் நிர்வாகக் குழுவுக்கு ஆடவல்லானான நடராசர் பெயராலேயே திருநட்டக் கணப்பெருமக்கள் என்று பெயரிட்டுள்ளனர்.

முதலாம் பராந்தகன் (கி.பி. 907 - 955) தில்லை நடராசப் பெருமானிடம் எல்லையற்ற பற்றுடையவன். புராரியின் (சிவ பெருமான்) பாத கமலங்களில் படியும் தேனீயாக விளங்கினான் என்று இவனது சிவபக்தியை திருவாலங்காட்டுச் செப்பேடுகள் புகழ்கின்றன. தில்லை நடராசனுக்கு இவன் பொற்சபையை (ஹேம சபை) நிறுவினான். இவன் காலம் முதல் தில்லையம்பலம் கனகசபை, பொற்சபை, ஹேமசபை என்ற பெயர்களால் போற்றப் பட்டுள்ளது. ஆதலால், இவனுக்குக் "கோயில் பொன்வேய்ந்த பெருமான்" என்ற சிறப்புப் பெயர் இருந்தது. மேலும் இவன் காலம் முதலே நடராசப் பெருமானை சோழர் தம் குலதெய்வமாகவே வழிபடத் தொடங்கியுள்ளனர். இச்சிறப்பான காரணங்களால் பெரும்பற்றப்புலியூர் என்று அழைக்கப்படுகின்ற தில்லையரசனான நடராசனின் பெயரில் திருப்பாதிரிப்புலியூரில் உள்ள அன்றைய திருக்கடைஞாழல் பெருமானடிகள் கோயில் நிர்வாக சபைக்கு திருநட்டக் கணப்பெருமக்கள் என்ற பெயர் சூட்டப்பட்டுள்ளது என்பதை அறியலாம்.

அடிக்குறிப்புகள் :

1. A.R.E. 3 & 58 of 1898
2. Tamil Lexicon
3. Sanskrit-English Dictionary
4. புறம். 366, 373
5. மார்க்சியகாந்தி, நா, 1988. "கணத்தார்", அருண்மொழி : ஆய்வுத் தொகுதி, தொல்லியல் துறை, சென்னை.
6. தெ.இ.கல். தொகுதி - VII/740
7. தெ.இ.கல். தொகுதி - VII/744
8. தெ.இ.கல். தொகுதி - VII/742
9. தெ.இ.கல். தொகுதி - VII/754 & 759
10. பாபநாசம் வட்டக்கல்வெட்டுகள் தொடர் எண் : 53/1995 த.அ.தொ.துறை, சென்னை.



4

# அவரக்கரை தாழி

மா. கலைவாணன்
காப்பாட்சியர், ஆர்க்காடு

வேலூர் மாவட்டம், வாலாசா வட்டம், இராணிப்பேட்டையிலிருந்து மேற்கே 5 கி.மீ. தொலைவில் அவரக்கரை என்ற கிராமம் அமைந்துள்ளது. இவ்வூரின் மேற்கில் சுமார் 1.5 கி.மீ. தொலைவில் பழைய அவரக்கரை கிராமம் இருந்த அமைவிடப் பகுதி உள்ளது. பெண்ணை ஆற்றின் வடகரையில் 30 முதல் 40 ஏக்கர் பரப்பளவில் காணப்படுகிறது. இவ்விடத்தை 'நுகா' என்று மேல்பாடி இராசராசனின் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

இங்கு செங்கல் சூளைக்காக மண் எடுத்த பகுதி சுமார் 8 முதல் 10 அடி வரையிலான இரு பள்ளங்களாகக் காணப்படுகின்றன. இப்பள்ளங்களில் ஒன்றில் பெரிய தாழி போன்ற சுடுமண்ணால் செய்த இரண்டு உறைகள் காணப்பட்டன. மேலும் தாழி அல்லது உறைகளின் உடைந்த பகுதிகளும் கிடைக்கின்றன. மண் எடுக்கப்பட்ட பகுதியை மேலும் ஆய்வு செய்ததில் பள்ளங்களின் ஓரங்களில் மனிதன் வாழ்ந்ததற்கான தடயங்கள், ஒரே ஒரு மண் அடுக்கில் (One layer) மட்டும் உள்ளன. இம்மண் அடுக்கு சுமார் 50 செ.மீ. வரை உள்ளது.

இம்மண் அடுக்கில் தடிமனான சிவப்புப் பானை ஓடுகள் (Coarse Red-ware) மட்டுமே கிடைகின்றன, இவையன்றி வேறு தொல்பொருட்கள் ஏதும் கிடைக்கவில்லை. இப்பகுதியில் மகாவீரர் சிற்பம் ஒன்று காணப்படுகிறது, இச்சிற்பம் 110 செ.மீ. உயரமும் 70 செ.மீ. அகலமும் கொண்டது. தியான நிலையில் அமர்ந்துள்ள இம் மகாவீரர் சிற்பத்தின் தலையின் பின்புறம் ஒளி வட்டமும் தலைக்கு மேல் முக்குடையும் அதற்கு மேல் அரச மரமும் காணப் படுகிறது. மகாவீரருக்கு இருபுறமும் வெண்சாமரம் வீசுபவர்கள் உள்ளனர். இச்சிற்பத்தின் வலப்புறம் சிங்கம் ஒன்று சிறிய உருவில் வடிவமைக்கப்பட்டுள்ளது. மகாவீரர் சிற்பத்தின் காலம் கி.பி. 10-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருக்கலாம்.

அவரக்கரை கிராமத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ள தாழி பழங்காலத்தில் தானியங்கள் சேமித்து வைக்கும் தானிய உறையாக இருக்கலாம். இத்தாழியின் மேல் விளிம்பு 8 செ.மீ. அகலத்துடன் உள்ளது. இத்தாழியில் நாம் சிறப்பாகக் கருதத்தக்கது. இவ்விளிம்பில் எழுத்துகள் என்பதே காணப்படுகின்றன. அதில் உள்ள வாசகம் வருமாறு :

அவரக்கரை தாழி

''ஸ்வ[ஸ்]திஸ்ரீ கடக்கங் கொண்டாந் அகமுடையாள் துக்கையாண்டி தன்மம்''



இவ்வெழுத்துகளின் எழுத்தமைதியைக் கொண்டு இதனின் காலம் கி.பி. 12-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்று கூறலாம். இத்தாழியின் மேலபக்கம் 80 செ.மீ. விட்டமும் அடிப்பக்கம் 105 செ.மீ. விட்டமும் இதனின் உயரம் 70 செ.மீ. ஆகவும் உள்ளது. இத்தாழி மூன்றுப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு இம்மூன்று பகுதிகளிலும் சிற்பங்கள் புடைச் சிற்பங்களாக உருவாக்கப்பட்டுள்ளது ஒரு சிறப்பானதாகும். முதற்பகுதியில் விநாயகர் உருவம் ஒன்றும் விநாயகருக்கு வலப்பக்கம் குதிரை வீரனின் உருவமும் இடப்பக்கம் வணங்கும் நிலையில் ஒரு மனிதனின் உருவமும் காணப்படுகின்றன.

இரண்டாவது பகுதியில் குரங்கு ஒன்று இடப்புறம் நின்ற நிலையில் உள்ளது. அதனை அடுத்து மூன்று பெண்கள் வரிசையாக நிற்கின்றனர், இம் மூன்று பெண்களுக்கும் மார்புக் கச்சை இல்லை, நடுவில் நிற்கும் பெண் கர்ப்பிணி யாகக் காட்டப்பட்டுள்ளாள். மூவருக்கும் இணையாக ஒரு யானையும் இவர்களுக்கு கீழே ஒரு யானையின் உருவமும் காணப்படுகிறது. இவ்யானைகளின் கழுத்திலும் வயிற்றுப் பகுதிகளிலும் மணிகள் அலங்கரிக்கப்பட்டுள்ளன.

மூன்றாவது பகுதியில் நடனமிடும் பெண்ணின் வலப்புறத்தில் ஓர் ஆணும் இடப்புறத்தில் ஒரு பெண்ணும் மத்தளம் வாசிக்கும் நிலையில் காட்டப்பட்டுள்ளனர்.

இத்தாழி கண்டெடுக்கப்பட்ட இடத்தில் நீர் உள்ளதால் நீர் வற்றியவுடன் இவ்வுறைக்குக் கீழ் ஏதேனும் உறைகள் அல்லது தாழி காணப்படுகின்றதா என்பதை ஆய்வு செய்தல் வேண்டும்.

எனவே இங்கு கண்டெடுக்கப்பட்ட தாழியில் உள்ள எழுத்துப் பொறிப்புகளும், சுடுமண் உருவப் புடைச் சிற்பங்களும் கி.பி. 12-ஆம் நூற்றாண்டின் சிறப்புகளை எடுத்துக்காட்டுவன எனலாம்.

---

குறிப்பு : வேலூர் அரசு அருங்காட்சியகக் காப்பாட்சியர் திரு சரவணன் அவர்கள் கொடுத்த தகவலின்படி தொல்லியல் துறை முதன்மை ஆணையரின் ஆணைக்கிணங்க இப்பகுதியில் கண்டெடுக்கப்பட்ட தாழி ஆய்வு செய்யப்பட்டது.



சென்ற இதழின் தொடர்ச்சி . . . .

## கல்வெட்டில் இறைப் பணியாளர்கள் (அடிமைகள்)

### உறவுப் பெயர்கள்

இக்கல்வெட்டிலும் 'மகன்', 'மகள்', 'மருமகள்', 'தம்பி' 'தங்கை' என்ற உறவுப் பெயர்கள் காணப்படுகின்றன. இவர்கள் கோயில் பணிக்காகக் கொடுக்கப்பட்டதையும், இவர்களின் பெயர்கள் ''வரியிலார் கணக்கில்'' எழுதப்பட்டதையும் இக்கல்வெட்டு தெரிவிக்கின்றது. இவர்களைக் கோயில் சபையார் கையாண்டு கொள்ளவும் இதனைக் கல்லிலுஞ் செம்பிலும் வெட்டிக்கொள்ளவும் அனுமதி தரப்பட்டதை இக்கல்வெட்டு குறிப்பிடுகின்றது. இதற்குத் 'தச்சை நென்மலி உடையான்' என்பவன் சாட்சியாக இருந்ததும் தெரிகிறது. தச்சை என்பது தச்சநல்லூர் என்ற ஊர்ப்பெயரின் சுருக்கமாகும்.

### அடிமைச்சாசனம்

இதனைத் தொடர்ந்து கேரள மன்னன் ஒருவனின் சேரன் மகாதேவி அம்மைநாதசுவாமி கோயில் கல்வெட்டொன்று: அடிமைச் சாசனமாகக் கல்வெட்டித் தரவேணுமென்று ஒரு பெண் மன்னனிடம் முறையிட்டதைத் தெரிவிக்கின்றது.

இக்கல்வெட்டு கொல்லம் ஆண்டு 624-ல் வெட்டப்பட்டுள்ளது (கி.பி. 1448). இதில் 'பிற்பகையார்' என்ற ஒரு தாய் தம்முடைய ஐந்து பெண்மக்களையும் கோயில் பணிக்காக அடிமையாக விடத் துணிந்ததைத் தெரிவிக்கின்றது, அப்பெண்மக்கள் ஐவரின் பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. அப்பெயர்கள் வருமாறு; 'நாகர்', 'பிச்சம்மை', 'மூக்கம்மை', இவள் தங்கை 'ராமர்'; 'என்னைப்பெற்றாள்' என்பன. இவர்களைப் பெற்ற தாயே கைலாசநாதர் கோயிலுக்கு 'இரண்டாம் குடியாக' நியமித்து அடிமையாகக் கல்வெட்டித் தரவேணுமென்று மன்னனிடம் பணிந்து கேட்டுக் கொண்டதைத் தெரிவிக்கின்றது.

### முடிவுரை

மேற்சொன்ன கல்வெட்டுகளின் மூலம் கி.பி. 15,16-ஆம் நூற்றாண்டுகளில் கோயில் பணிகளுக்காகப் பணியாட்களை (அடிமைகளைப் போல) விலை கொடுத்து வாங்கியும், அன்றிச் சுதந்தரமாகக் கொடுத்ததையும் அறிய முடிகின்றது. இந்நூற்றாண்டுகளில் குழப்பமான அரசியல் சூழல் காரணமாகவோ அன்றிப் பஞ்சம் காரணமாகவோ இவ்வாறு அடிமைப் பணியாளர்களைக் கொடுத்தனர் என்பதையும் உணர முடிகின்றது.

# 5 கிரந்த எழுத்துகள் - ஒரு பார்வை

**அ. வசந்தகல்யாணி**
கல்வெட்டாய்வாளர்(சி.நி.) சென்னை

தமிழ் எழுத்துகளின் தோற்றம், வளர்ச்சி, மாற்றம் ஆகியவற்றைப் பற்றி அறிஞர் பலர் ஆய்வு செய்து ஏராளமான செய்திகளை நமக்குத் தந்துள்ளனர். தமிழ்நாட்டைப் பொறுத்தவரை மக்கள் எல்லாக் காலத்திலும் எல்லா வகையிலும் ஒரு தனித் தன்மையைப் பேணி வந்துள்ளனர் என்பது இந்திய வரலாற்றை ஆய்வு செய்யும் அறிஞர் அனைவரும் கூறும் உடன்பட்ட கருத்தாகும். அந்த வகையில் பார்க்கும் போது 2,300 ஆண்டுகளுக்கு முன் இந்தியா முழுமையும் பிராமி என்ற வகை எழுத்து பழக்கத்தில் இருந்த அதே காலகட்டத்தில் தமிழ்நாட்டிலும் பிராமி எழுத்துக்குச் சமமான எழுத்துகள் வழங்கப் பட்டதைக் கல்வெட்டுகள் நமக்குப் புலப்படுத்துகின்றன. ஆனால் வடநாட்டு பிராமி எழுத்திற்கும் தமிழ் எழுத்திற்கும் தெளிவான வேறுபாடு இருந்ததையும் அறிகிறோம். தமிழ் எழுத்துகளிலிருந்து வடநாட்டு பிராமி எழுத்துகள் வளர்ந்தன என்றும்; சிற்சில வேறுபாடுகளோடு அப்படியே பின்பற்றப்பட்ட வடபிராமி எழுத்துகள்தான் தமிழ் எழுத்துகள் என்றும் கூறப்படும் இருவேறு கருத்துகளுக்கு இதுவரையிலும் முடிந்த முடிவு என்று கூற இயலாவிட்டாலும் தனித் தன்மை தமிழ் எழுத்துகளுக்கு இருந்தது என்பது மறுக்க இயலாக் கூற்றாகும்.

இவ்வாரம்ப காலத் தமிழ் எழுத்துகள் படிப்படியே காலப் போக்கில் வளர்ந்து கி.பி. 3-4-ஆம் நூற்றாண்டுகளில் இரண்டு வடிவங்களில் எழுதப்பட்டன. ஒன்று தமிழ் என்றும் மற்றது வட்டெழுத்து என்றும் வழங்கப்பட்டன. ஆகத் தமிழ் மொழியை எழுதவே ஒரு கால கட்டத்தில் இருவேறு வடிவங்களை உண்டாக்கி வழங்கியமை அவர்தம் எழுத்தாற்றலுக்குச் சான்று. அடுத்து வரும் காலகட்டமானது மிகவும் முக்கியமானது. வடமொழியான சமஸ்கிருதம் தென்னகத்தில் பரவி வளரத் தொடங்கிய காலகட்டம். வடஇந்தியா முழுவதும் தேவநாகரி என்ற வகை எழுத்தினைப் பயன்படுத்தி சமஸ்கிருதத்தை எழுதினர். தென்னாட்டில் இந்த தேவநாகரி எழுத்து வகையைப் பயன்படுத்தாமல் மற்றொரு எழுத்து பயன்பாட்டில் இருந்தது என்பது தெரிகிறது. அவ்வெழுத்துகளே கிரந்தம் எனப்பட்டது. எழுத்து வகைகளைக் குறிக்கும் பழமையான நூல்களான 'சமவயங்கசுத்த' என்ற சமண நூலும், 'லலிதவிஸ்தாரம்' என்ற பௌத்த நூலும் இப்பெயரைக் குறிப்பிடவில்லை. ஆயினும் கி.பி. 6-7-ஆம் நூற்றாண்டுகளில் அன்றைய தமிழ் எழுத்தின் அடிப்படையில் தோன்றிய ஒருவகை எழுத்துகள் பிற்காலத்தில்

கிரந்தம் என்ற பெயரால் வழங்கப்பட்டது. வடமொழி எழுத்துகளின் ஒலியை மட்டும் அப்படியே ஏற்றுக் கொண்டு தமிழ் எழுத்துகளுக்கு இடையே தேவையான வர்க்க எழுத்துகள் உருவாக்கப்பட்டன. உதாரணமாக 'க' என்ற தமிழ் எழுத்தினை முதன்மையாக்கி நான்கு வர்க்க எழுத்துகளாக அதாவது க ఖ గ ఘ ($க_1$ $க_2$ $க_3$ $க_4$) என்று அமைக்கப்பட்டது. இவ்வாறே ச,ட,த,ப என்ற எழுத்துகளையும் முதன்மையாக்கி வர்க்க எழுத்துகள் வடிக்கப்பட்டன. மற்ற எழுத்துகள் அனைத்தும் மேலும் அலங்கரிக்கப்பட்ட தமிழ் எழுத்துகளே. இவ்வாறு வடிக்கப்பட்ட எழுத்துகளுள் ஸ,ஹ,ஷ,ஜ போன்ற எழுத்துகள் இன்றும் வழக்கில் உள்ளன.

ஆக, கிரந்தம் என்ற புதிய எழுத்து வகை சமஸ்கிருதம் போன்ற பிற வடமொழிச் சொற்கள் தெளிவாக ஒலிக்கப்பட வேண்டும் என்ற கருத்தில் இன்றைக்குச் சுமார் 1,400 ஆண்டுகளுக்கு முன்னர் படைக்கப் பட்டது. தனித்தன்மை கொண்ட, தமிழ் மண்ணில் வளர்ச்சியுற்ற இப்பழமையான எழுத்திற்கு வரலாற்று முக்கியத்துவமும் தனிச் சிறப்பும் உள்ளது.

தமிழகத்தைத் தவிர இந்தியாவின் வேறெந்தப் பகுதியிலும் கிரந்தம் எழுதப்படுவதில்லை. ஆனால் இன்று கிரந்தம் என்பது ஏதோ வட எழுத்து என்று எண்ணுவதும் அதை எழுதத் தயங்குவதும் நடைமுறையில் உள்ளது. சமஸ்கிருதத்தை எழுத அதிலும் குறிப்பாகச் சமயம் தொடர்பான அல்லது கல்வெட்டுகள் பழைய வடமொழி இலக்கியங்கள் தொடர்பான செய்திகளை எழுதும் போது இவ்வெழுத்துகளைப் பயன்படுத்தினால் சொல்லும் பொருளும் மாறாமல் அதே நேரம் தமிழ் மண்ணுக்குரிய எழுத்துகளில் தான் எழுதுகிறோம். வட எழுத்துகளைப் பயன்படுத்தவில்லை என்ற நிறைடவுனும் எழுத இயலும்.

இக்கட்டுரை உருவாகக் காரணமாக இருந்த நிகழ்ச்சி இது தான்.

சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஆசிரியராகப் பணியாற்றிய திரு. வெங்கடராஜுலு ரெட்டியார் என்பார் "ஸ்ரீபுராணம்" என்ற ஜைன சமய நூலை 1946-ஆம் ஆண்டு பதிப்பித்தார். அந்நூல் சமயம் தொடர்பானதால் பல வடசொற்களும் இடம் பெற்றிருந்தன. ஆனால் ஆசிரியர் வர்க்க எழுத்துகளுக்கெல்லாம் 1, 2, 3, 4 என்ற எண்கள் கொடுத்து $க_1$ $க_2$ $க_3$ $க_4$ என்ற முறையில் எழுதிச் செல்ல .... அதைப் படித்துவிட்டு, அப்போது தமிழாராய்ச்சித் துறைத் தலைவராக இருந்த திரு.ச.வையாபுரிப் பிள்ளையவர்கள் "வட எழுத்துகளின் ஒரு வேறுபாடு நன்கு புலனாதல் வேண்டுமாகலின் வேண்டுமிடங்களில் கிரந்தவெழுத்து களை எழுதுதலே நன்று" என்று கருத்துக் கூற, அதன்படியே

திரு. வெங்கடராஜுலு அவர்களும் வேண்டுமிடங்களில் கிரந்த எழுத்துகளைப் பயன்படுத்தினார் என்பது ''ஸ்ரீபுராணம்'' நூலின் முன்னுரையினைப் படிக்கும் போது அறியப்பட்டது. தமிழ், வரலாற்று உலகைப் பொறுத்தவரை வையாபுரிப் பிள்ளையவர்களை அறியாதாருமிலர். அவர்தம் நேரிய கருத்துகளைப் போற்றாதாரும் இலர். எனவே அவர் கூறிய இக்கருத்தின் அடிப்படையும் மனதிற்கொள்ளத்தக்கதே.

தமிழ் மொழிக்கே உரிய சொற்களாயின் அவற்றை வலிந்து கிரந்த எழுத்துகளில் எழுதத் தேவையில்லை. ஆனால் பிறமொழிச் சொற்களாயின் அப்படியே எழுத்தாளும் வசதியும் கிரந்த எழுத்துக்களால் கிடைக்கிறது. விஜயலஷ்மி, கணேஷ், மார்க்ஸ், ஸ்டாலின், ஷேக்ஸ்பியர் போன்ற பிற மொழிச் சொற்களைத் தமிழ் எழுத்து வகையான கிரந்த எழுத்துகளைப் பயன்படுத்தி எழுதும் போது ஒலி வேறுபாடும் தெரிகிறது, பொருளும் நேரடியாகப் புரிகிறது. அதுவன்றி ஷேக்ஸ்பியர் என்ற சொல்லைத் தமிழாக மாற்றிச் ''செகப்பிரியர்'' என்று கொள்வதால் தமிழ் நாட்டில் இருப்பவருக்குக்கூடப் பொருள் விளங்காத நிலையாகி விடுகிறது.

எனவே வடமொழிச் சொற்களை எழுதுவதற்கென்றே 1,400 ஆண்டுகட்கு முன்னர் உருவாக்கப்பட்ட தனியான எழுத்து வகை கிரந்த எழுத்துகளைப் பயன்படுத்திப் பிறமொழிச் சொற்களை எழுதுவதால் இடர்பாடு ஏற்படுவதில்லை என்பதோடு சுமார் 1,400 ஆண்டுகள் தமிழ்நாட்டில் தொடர்ந்து வழக்கத்திலிருந்துள்ள ஓர் எழுத்து வகைக்கு உயிரூட்டி என்றும் நிலைத்திருக்கச் செய்கிறோம் என்ற பெருமையும் நம்மைச் சாருகிறது அல்லவா?



# Recent Discovery of Buddhist Remains in Tamil Nadu



Dr. S. Vasanthi
Archaeologist, Chennai

## Introduction

Buddhism had its foothold in Tamil Nadu right from 3rd Century BCE onwards due to the ardent efforts of the Emperor Ashoka. Buddhism was practiced by the Tamil people in the ancient period was revealed from the Tamil literary works such as Maduraikkanchi[1] Silappadikaram[2] and Manimekalai[3]. Buddhism also gained royal patronage during the Pallava, Chola and Pandya dynasties. But it had its set back due to the rise of new religious movement called the Bhakti movement in the sixth century CE, in Tamil Nadu and the revival of Saivism and Vaishnavism by the Nayanmars and Alvars. Buddha's images were found in villages thoughout Tamil Nadu. Apart from important Buddhist centres like Kanchipuram, Vanji (Karur), Kaverippumpattinam, Nagappattinam and Bhutamangalam, there were alsō some important minor centres like Vellanur, Chettipatti, Alangudipati, Navalur, Kuvam, Mangadu in northern part; Alagarmalai, Anaimalai, Tirupparankunram, Virasikamani in southern part of Tamil Nadu.

Apart from the earlier discoveries of Buddhist remains there are number of recent discoveries of Buddha images, inscriptions in all over Tamil Nadu This paper tries to highlight these findings of Buddhism in Tamil Nadu.

## Kaverippumpattinam

Among the recently found Buddhist remains in Tamil Nadu a stone image of Buddha recovered from a small fishing village called Chinnamedu[4] near Kaverippumpattinam in Nagappttinam District. This image made of lime stone available from Palnad in Andhra Pradesh; comparable with that of Nagarjunakonda image of Buddha from Andhra Pradesh. Hence it could be dated to 3rd to 4th Century C.E The statute recovered from the sea bed of 36 feet depth and about 1½km off

